[23rd March 1961

பட்டிருக்கிறது. அப்படியானால் பிற நாடுகளிலிருந்து வருகிற யாத்திரிகர்களுக்கு மட்டுமா அல்லது நமது மாநிலத்திலிருந்தே அங்கு யாத்திரை செல்பவர்களுக்கும் பெர்மிட் வழங்கினால் நமது கொள்கை அதனால் பாதிக்கப்படாதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வெளிநாடுகளிலிருந்து வருகிறவர்கள் குடிப்பழக்கம் உள்ளவர்களாயிருந்தால் அவர்களுக்கு தொந்தரவு இருக்கக்கூடாது என்றுதான் இந்தஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன், இரண்டு நாட்களுக்கு முன்பு அமெரிக்காவிலிருந்து வந்த ஒரு யாத்திரிகர் என்னிடம் சொன்னார், அமெரிக்காவில் எல்லோருமே குடிப்பதில்லை, ஆகவே அங்கிருந்து வருகிறவர்களுக்கு, குடிப்பழக்கம் உள்ளவர்களுக்கு, பெர்மிட் கொடுப்பதை கவனித்து பார்க்கவேண்டுமென்று சொன்னார். பல பேர்கள் ஆசிரியர்களாக வருகிறார்கள். அவர்களால் அதிகம் செலவு செய்யமுடியாது, ஆகவே வெளிநாடுகளிலிருந்து வருகிற யாத்திரிகர்களுக்கு ஒருவிதத் தொல்லையும் இருக்கக் கூடாதென்றுதான் விதிகள் அப்போதைக்கப்போது தளர்த்தப்படுகிறது.

SRI S. RAMALINGA PADAYACHI : நமது அரசாங்கம் உயர்ந்த கொள்கைகளை கடைப்பிடிக்கும்போது வெளிநாடுகளிலிருந்து வரும் யாத்திரிகர்களுக்கு மட்டும் என் பர்மிட் கொடுக்க வேண்டும், அவர்களுக்கும் தடை இருக்கக்கூடாதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நமது கொள்கையை மற்றவர்களிடம் நாம் நிர்ப்பந்தித்து, புகுத்துவது சரியல்ல.

SRI N. R. THIAGARAJAN : விலைக்கு விற்காமல் வீட்டிலேயே சாராயம் காய்ச்சிக் குடிக்க அனுமதித்து விடலாம் என்று ஒப்பற்ற தலைவர் ராஜாஜி அவர்கள் கூறினார்களே, இது சர்க்காருக்குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : யார் கூறினார்கள் என்று எனக்குத் தெரியாது. கனம் அங்கத்தினர் அவர்களுக்கு இதில் அவ்வளவு அக்கறையிருக்குமானால் அதை எடுத்து ஒரு பிரேரபணையாக அரசாங்கத்தினிடம் கொண்டுவந்து சொன்னால் அதைப்பற்றி கவனிக்கலாம், இது வரையில் அப்படி இதைப்பற்றி கவனமே இல்லை.

*"Tamil Nadu" agitation*

* 1028 Q.—SRI A. A. RASHEED :
SRI K. SATTANATHA KARAYALAR : } Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) the number of persons arrested in the agitation for renaming the Madras State as Tamil Nadu; and

(b) the number of persons (i) prosecuted and (ii) convicted?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) No arrests were made anywhere in the State except in one isolated instance. It appears that in the Nilgiris district six persons were arrested under section 151, Cr.P.C., on the 16th February 1961.

(b) Nil.

SRI A. A. RASHEED : May I know whether these prisoners were treated as political prisoners?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There is no question of politics in this. As I said in only one case in Nilgiris, six persons were arrested under section 151, Cr.P.C. I do not know whether the case has been concluded.

23rd March 1961]

Sri V. K. KOTHANDARAMAN : கிளர்ச்சிக்குப் பிறகு தமிழ் நாடு என்று பெயர் வைக்க ஏற்றுக்கொண்ட காரணத்தினால், பொதுவாக எந்தப்பிரச்னையாகயிருந்தபோதிலும் கிளர்ச்சி செய்வது மூலமாகத்தான் காரியத்தைச் சாதிக்க முடியும் என்ற மனோபாவம் பொதுமக்களிடையே வளர்ந்திருக்கிறது என்பதை கனம் அமைச்சர் அவர்கள் அறிவார்களா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : பொதுமக்கள் மத்தியில் அவ்வித மனோபாவம் ஒன்றும் வளர வில்லை. ஆனால் கனம் அங்கத்தினர் அவர்கள்தான் அப்படி ஒரு பிரசாரம் செய்யப் பார்க்கிறார்கள் என்று புலப்படுகிறது. அவர்களுக்கு நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன், என்ன மாறுதலை அரசாங்கம் ஒப்புக்கொண்டு முடிவுசெய்து நிறைவேற்ற வருகிறதோ அந்த மாறுதல் இந்தக் கிளர்ச்சி ஏற்படுவதற்கு முன்பே முடிவு செய்யப்பட்ட விஷயம். இந்தக் கிளர்ச்சியின் தலைவரிடமே இது தெரிவிக்கப்பட்டது. ஒவ்வொருவரும் தாங்கள் தான் சாதித்துவிட்டோம் என்று சொல்வதானால் யார் வேண்டுமானாலும், எதை வேண்டுமானாலும் சொல்லிக்கொள்ளலாம்.

Sri J. MATHA GOWDER : நீலகிரியில் அரெஸ்ட் செய்யப்பட்டவர்கள் எல்லோரும் விடுதலை அடைந்து விட்டார்களா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : முதலில் பெயிலில் விடப்பட்டிருந்தது. பின்னால் என்ன நடந்தது என்று தெரியவில்லை.

Sri J. MATHA GOWDER : அவர்கள் பேரில் இன்னும் ஏதாவது நடவடிக்கைகள் இருக்குமானால் கிளர்ச்சிகள் முடிந்து விட்டதே; ஆகவே அவர்களை விடுதலை செய்ய சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு உத்தரவு பிறப்பிப்பார்களா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் அவர்கள்மீது அனுதாபம் காட்டுவது ஏன் என்று எனக்குப் புரியவில்லை. அங்கு, சிவில் கோர்ட் நடக்கிறது, கோர்ட் காம்பவுண்டுக்குள் உட்கார்ந்து கொண்டார்கள். கோர்ட் நடக்கிறது என்று கூறியும் கேட்காமல் சப்தம் போட்டுக் கொண்டிருந்தார்கள். அப்படி கோர்ட் நடவடிக்கைகள் பாதிக்கப்படக் கூடியவாறு நடந்துகொண்டார்கள். விடுதலை செய்வது பற்றி, பிரத்தியேக சலுகை காட்டவேண்டுமென்பதற்கு இடமில்லை.

*Residential peons of officers (discharged)*

*1029 *Q.*—Sri V. K. KOTHANDARAMAN :<br>Sri M. P. SARATHI: } கனம் முதல் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சம்பளக் கமிஷன் சிபார்சின்பேரில் ஆபீசர்களின் வீடுகளில் வேலை செய்யும் பியூன்களை வேலையிலிருந்து எடுத்துவிடப் போவது உண்மையா ?

(இ) எப்போது முதல் ?

(உ) எந்த அளவுக்கு எடுத்துவிடுவதாக உத்தேசம் ?

(எ) எடுக்கப்படும் பியூன்களுக்கு வேறு வேலை கொடுப்பதாக உத்தேசமுண்டா ? விவரம் ?

The Hon. Sri C. SUBRAMANIAM : (அ) Based on the recommendation of the Madras Pay Commission, for a reduction in the present strength of peons in Government Service, the Government have formulated a scheme for a gradual retrenchment of peons sanctioned for work in the residence of certain officers. The Government have sanctioned Rs. 30 per mensem to officers who would prefer to surrender their residence peons. Every officer, who is entitled to a peon in his residence, was given the option, to retain the peon or surrender him and receive Rs. 30 per mensem as compensatory allowance *in lieu* of the peon. The